# 24

## புதிர்

'இந்தா, கமலம். அப்புறம் படிக்கலாம். தெருவில் கோபாலன் காத்துக் கொண்டிருக்கிறான். தீர்த்தம் கொண்டுவா!' என்று நடேசன் சட்டை போட்டுக்கொண்டே சொன்னான்.

பத்திரிகையைப் படித்துக்கொண்டு நாற்காலியில் மெய்ம்மறந்து உட்கார்ந்திருந்த கமலம் சட்டென்று தமையனின் முகப்பார்வையைக் கவனித்தாள். அதில் ஒன்றும் வித்தியாசமான குறி தென்படாததால், 'இனிமேல் என்னை இப்படியெல்லாம் அதிகாரம் பண்ணாதே உன் அகமுடையாளை அதிகாரம் செய்!' என்று சொல்லிச் சிரித்துக்கொண்டு ஜலம் கொண்டுவந்தாள்.

நடேசன் அதைக் குடித்துவிட்டு வெளியே போவதற்குப் புறப்பட்டான்.

'அந்தப் புஸ்தகத்தை மறந்துவிட்டாயே! வேறே ஏதாவது நல்லதாகக் கொண்டுவா' என்று கமலம் மேஜையிலிருந்து அதை எடுத்து அவன் கையில் கொடுக்க வந்தாள்.

அவன் அதை வாங்கிக்கொள்ளாமல், 'அது இருக்கட்டும்; வேறு புஸ்தகம் வாங்கிக்கொண்டு வருகிறேன்' என்று சொல்லிக்கொண்டே நகர்ந்தான்.

'எதற்காக இருப்பது அநாவசியமாக? நான் படித்தாகிவிட்டதே!' என்றாள் கமலம்.

நடேசனுக்குக் கொஞ்சம் கோபம் வந்தது.

'நீ படித்தாகிவிட்டால் போதுமா?' என்று சட்டென்று எழுந்த வார்த்தைகளை அடக்கிக்கொண்டு, 'அவள் படிக்கவேண்டுமாம்; இருக்கட்டும்' என்றான்.

கமலத்தின் முகத்தில் பளிச்சென்று ஒரு வெறுப்புக் குறி தோன்றிற்று. அவள் அதை உடனே மறைக்க முயன்றாள். அது மாறி முகத்தில் ஓர் ஏளனமான புன்னகை தோன்றிற்று. அதை அவளால் மறைக்க முடியவில்லை.

கலைமகள், ஆகஸ்ட்-1938

'அவள் படித்துக் கிழிக்கவில்லையா!' என்று சொல்லிக்கொண்டு புஸ்தகத்தை அலட்சியமாக மேஜைமேல் எறிந்தாள்.

நடேசனுக்குக் கோபம் பொங்கி எழுந்தது. அதை அவன் எப்படியோ அடக்கிக்கொண்டு விட்டான். ஆனால் அதன் சின்னங்கள் அவன் முகத்தில் தென்பட்டனபோல் தோன்றியது. அவன் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. கமலம் அவன் முகத்தைக் கவனித்துக்கொண்டு ஒரு நிமிஷம் நின்றாள். அடுத்த நிமிஷம் அவளுடைய கண்களில் ஜலம் மலமலவென்று பெருகிற்று. அதை அவன் பார்க்கக்கூடாது என்று எண்ணுபவள்போல அவள் சட்டென்று திரும்பி அறையை விட்டு வெளியே போய்விட்டாள்.

நடேசன் கோபாலனுடன் உலாவப் புறப்பட்டான். இருவரும் ரெயில் பாதையோரமாகச் சென்ற ரஸ்தா வழியே வெகுதூரம் போனார்கள். கோபாலன் ஏதேதோ சொல்லிக் கொண்டே போனான். நடேசன் பேசவில்லை. இயந்திரம் போலக் கோபாலனுக்குச் சில பதில்கள் சொன்னான். ஒரு வாய்க்கால் மதகில் போய் இருவரும் உட்கார்ந்து கொண்டார்கள்.

சாலையில் இரண்டு பக்கங்களிலும் நெல்லி மரங்கள். நடுவில், சில இடங்களில் நாவல் மரங்களும் இருந்தன. ஆடிமாத முடிவாகையால் சாலையெல்லாம் நாவற் பழங்கள் கொட்டிக் கிடந்தன. 'இரண்டு பக்கங்களிலும் கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் நன்செய்கள். நடவுகாலம்; வயல்களிலெல்லாம் ஜலம் நிறையக் கட்டியிருந்தார்கள். சேறு புளித்தமாவுபோல நுரைத்துப் பொங்கி நின்றது. சில இடங்களில் நடவாகி இருந்தது. சோகை பிடித்த மஞ்சள் நிற நாற்றுக்கள் தூரதூரமாக நடப்பட்டிருந்தன. சில இடங்களில் பள்ளப்பெண்கள் மார்புச் சேலையை இடுப்பில் சுற்றிக்கொண்டு முழங்கால் சேற்றில் மும்முரமாக நாற்று நட்டுக் கொண்டிருந்தார்கள்.

பிரதிதினமும் இவற்றையெல்லாம் கவனித்துக் கோபாலனும் நடேசனும் அக்கு அக்காக அலசி ஆராய்ந்து நுணுக்கவாதம் செய்வார்கள். அன்றோ ஆராய்ச்சி ஓடவில்லை. நடேசன் கண்களில் ஒன்றும் தென்படவே இல்லை. கமலத்தின் கலங்கிய கண்களையுடைய முகந்தான் அவன் முன்வந்து எல்லாவற்றையும் மறைத்தது.

எதற்காக அவள் அப்படிக் கண் கலங்கினாள்? நடேசன் அவளை வாய்திறந்து கோபித்துக்கொள்ளக்கூட இல்லையே? அப்படி இருந்தால் தான் என்ன? அவன் அவளைக் கோபித்துக் கொண்டதில்லையா? எவ்வளவோ தரம்! ஆனால் அதெல்லாம் நடேசனுக்குக் கல்யாணம் ஆவதற்கு முன். இப்பொழுது அவளைக் கோபித்துக் கொள்ளக்கூடாது என்று எழுந்த கோபத்தை வெகு சிரமத்துடன் அடக்கிக்கொண்டு வாய்பேசாமல் இருந்தும் அவள் கண் கலங்கினாள்!

அவள் சொன்னதும் செய்ததும் சரியா? புஸ்தகத்தை அவள் படித்து முடித்துவிட்டாள்; அவளுக்கு வேறு புஸ்தகம் வேண்டியதுதானே? அதை நடேசன் எடுத்துக்கொண்டு போக வேண்டுமென்று அவள் வற்புறுத்துவானேன்? நடேசனின் மனைவி படிக்கச் சக்தியற்றவள் என்பதை அவனுக்குச் சுட்டிக் காட்டவா? அல்லது அவன் மனைவி படிக்கக்கூடாதென்றா? அதன் அர்த்தம் என்ன?

'அவள் படிக்க வேண்டுமாம்' என்று நடேசன் சொன்ன பிறகும், அவள் அவன் சொன்னதை அலட்சியமாகத் தூரத் தள்ளி, 'அவள் படித்துக் கிழிக்கவில்லையா!' என்றாள். அதில் எவ்வளவு அர்த்தம்!

'அவளுக்குப் படிப்பில் தேர்ச்சியும் ஆவலும் என்னைப்போல் இல்லை. அப்படி இருக்க நீ, உன் பெண்சாதி என்பதற்காக அவளுக்கு என்னுடன் படிப்பில் சமஅந்தஸ்துக் கொடுக்கப் பார்க்கிறாய். அது எனக்குப் பிடிக்கவில்லை. நான் ஒன்று சொல்லும்பொழுது அவள் மேல்கையாக வேறொன்று சொல்லி, உன்னை அப்படிச் செய்யச் சொல்லிவிட்டால், நான் சொன்னது என்ன ஆவது? நீ என்னை அலட்சியம் செய்தால் அவள் என்னிடம் எவ்வளவு மதிப்பு வைப்பாள்?'

அந்த ஒரு நிமிஷத்தில் கமலத்தின் எண்ணங்கள் இம்மாதிரி ஓடியிருக்க வேண்டும். நடேசன் தன் மனைவி முன் அவளை விட்டுக் கொடுத்து விட்டால், அவன் மனைவியை ஏளனம் செய்து, தான் ஆறுதல் கொண்டாளோ?

★★★

ராஜம் புக்ககம் வந்து ஆறு மாதங்கள் ஆகியிருந்தன. கமலம் இன்னும் புக்ககம் போகவில்லை. இருவருக்கும் கிட்டத்தட்ட ஒரே வயசு தான். இருவரும் வீட்டுக்காரியங்களில் கைதேர்ந்தவர்கள். ஆனால் நடேசன் தன் தங்கை கமலத்தைப் படிப்பில் நன்றாகத் தாயர் செய்திருந்தான். பாட்டும் நன்றாகச் சொல்லிக் கொடுத்திருந்தான். அவன் மனைவிக்குப் படிப்பில் தேர்ச்சி இல்லை; பாட்டும் தெரியாது. தன் குறைகளை அறிந்து அவள் மிகவும் நொந்திருந்தாள். ஆனால் அவள் என்ன செய்வாள்! பிறந்தகத்தில் அவளுக்கு அந்த வசதிகள் கிடைக்கவில்லை. புக்ககத்திற்கு வந்த பிறகு படிக்க ஆரம்பிக்கிறது என்பது முடிகிறதா? எவ்வளவோ முயற்சி செய்தாள். கமலத்திடமிருந்து பாட்டுக்கூடக் கற்றுக் கொள்வதாகத் திட்டம் போட்டு ஒருநாள் சொல்லிக் கொள்ள ஆரம்பித்தாள். அன்றே கமலம் அவளுடைய அறியாமையைப் பற்றி ஏதோ ஏளனமாகச் சொல்லிவிட்டாள். ராஜத்திற்கு அது தாங்கவில்லை. அன்று முழுதும் அழுதாள். பாட்டு அதோடு நின்றுவிட்டது.

மற்றபடி இருவரும் எதிலும் ஒருவருக்கு ஒருவர் சளைத்தவர்கள் அல்ல. அழகில் இருவரும் போட்டி போடுகிறவர்கள் போலத்தான்

இருந்தார்கள். கமலம் பிறந்தகத்தில் இருந்ததால், கூட்டிலிருந்து வெளி வந்த புறாவைப்போல நிர்ப்பந்தமற்று ஸஞ்சரித்தாள். ராஜம் 'புக்ககத்து நாட்டுப்பெண்' ஆகையால் அடக்கத்துடனும் அமரிக்கையுடனும் இருந்தாள்.

பக்கத்திலிருந்த முந்திரித்தோப்பில் பக்ஷிகள் அமர்க்களம் செய்து கொண்டிருந்தன. வயல்களில் வேலை செய்து கொண்டிருந்தவர்கள் ஒவ்வொருவராக வேலை முடிந்து வாய்க்காலில் வந்து குளிக்க ஆரம்பித்தார்கள்.

எதிலும் ஊன்றாத ஏக்கப் பார்வையுடன் நடேசன் உட்கார்ந்திருந்தான். கமலத்தின் கண் கலங்கினது, தன் தமையன் கோபித்துக்கொண்டான் என்பதால் அன்று. நடேசன் அவள் சொன்னவுடன் அந்தப் புஸ்தகத்தை எடுத்துக்கொண்டு போகாமல், மனைவி சொன்னதற்கு இணங்கி அதை வீட்டில் வைத்துவிட்டான் என்பதால் தான். அவன் கமலத்தின் வார்த்தை யைத் தட்டிவிட்டான்; மனைவியின் பேச்சைக் கேட்டுவிட்டான். கமலத்தைக் காட்டிலும் அவனுக்கு மனைவி 'ஓசத்தி'யாய்ப் போய் விட்டாள். அதுதான் விஷயம். நடேசன் வேறொரு முடிவிற்கும் வரமுடியவில்லை.

★★★

நடேசனுக்குக் கல்யாணம் ஆன நாலாம் நாளே கமலத்தின் கலக்கம் ஆரம்பித்துவிட்டது.

இரவு ஊர்வலம் முடிவதற்கு வெகு நேரமாகிவிட்டது. எல்லோரும் அலுத்துப்போய் விடுதியில் வந்து படுத்துக்கொண்டார்கள். ஆனால் நாழிகை அதிகமாகி விட்டபடியால் ஒருவருக்கும் தூக்கம் வரவில்லை. மூலைக்கு மூலை எல்லோரும் உட்கார்ந்து கொண்டும் படுத்துக் கொண்டும் பக்ஷணம், சீர் முதலிய விஷயங்களைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

நடேசனுக்கு ஏதோ ஒருவிதமான உள்ளக்கிளர்ச்சி. மஞ்சள் கலை யுடுத்த அந்த மணமாது எங்கோ கற்பனையிலிருந்து கிளம்பி வந்தவள் போல வந்து அவன் முன் நின்று கைகொடுத்தாள். அந்த நான்கு நாட்களும் அவன் ஒரு புது உணர்ச்சிப் பெருக்கில் நீந்திக் கொண்டிருந்தான். தூக்கம் வரவில்லை அவனுக்கு. ஜன்னலில் போய் உட்கார்ந்து கொண்டான்.

அந்த நாலு நாட்களும், பெரியவள் ஆகாதவள் என்ற சுதந்திரத்துடன் கமலம் கேலியும் சிரிப்புமாகத்தான் இருந்தாள். ஆனால் அவள் நடேசனுடைய மாதிரியைக் கூர்ந்து கவனித்துக்கொண்டிருந்தாள். அவளுடைய மனத்தில் எடுத்துரைக்க முடியாத ஏதோ ஒரு சஞ்சலம், ஏதோ ஒரு வெறுப்பு, திடீரென்று தோன்றினதுபோன்ற உணர்ச்சி.

கமலம் நடேசன் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டாள்.

கூடத்திலிருந்த 'பெட்ரோமாக்ஸ்' விளக்கின் வெளிச்சம் தடைப்பட்டு வந்து அறையில் கொஞ்சமாகத்தான் பட்டது. ஜன்னலில் பாதி வெளிச்சமே இருந்தது.

கமலம் பக்கத்தில் வந்து உட்கார்ந்த பிறகும் நடேசன் மெய்ம்மறந் தவனாய் மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

'அண்ணா, இனிமேல் நீ என்னோடே பேசவேமாட்டே, இல்லையா?' என்று கேலியாகக் கொஞ்சிக் கொண்டு சொன்னாள் கமலம்.

அப்படிச் சொல்லி வாயை மூடின உடனேயே அவளுக்கு அதில் ஆழ்ந்த அர்த்தம் இருந்ததாகப்பட்டது. நடேசன் பதில் சொல்லாமல் உட்கார்ந்திருந்தான்.

'ஆமாம். நீ இனிமேல் என்னோட பேசத்தான் மாட்டே!' என்றாள் மறுபடியும்.

'என்ன?' என்றான் நடேசன்.

'ஆமாம், அண்ணா! நீ இந்த நாலு நாளிலேயே என்னோட பேசல்லியே!' என்று அவள் சொன்ன பொழுது அவள் நெஞ்சு அடைத்துக்கொண்டது; கண்ணீர் ததும்பியது. முகத்தைத் திருப்பிக் கொண்டு ஜன்னல் வழியாக வெளியே பார்த்தாள்.

'என்ன அசடாப் பேசறயே; பேசாமலென்ன?' என்று நடேசன், சட்டென்று அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டு சொன்னான்.

அவன் சொன்னது அவள் காதில்படவில்லை.

'அண்ணா, இனிமேல் அவள்தான் – அவளோடே தான் நீ பேசுவாய்' என்று திணறிக்கொண்டு சொன்னாள் கமலம்.

'என்ன கமலம், பைத்தியம் போலப் பேசுகிறாய்? அவளுக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்?' என்று நடேசன் கொஞ்சம் மனத்தாங்கலாக் கேட்டான்.

'என்ன சம்பந்தமா? இப்பவே தெரியறதே நன்னா'

'என்ன தெரிகிறது?'

'என்ன தெரிகிறதா! என் மனஸில் இருக்கிறதைச் சொல்லிவிடுகிறேன். நான் இருந்த இடத்திற்கு அவள் வந்துவிட்டாள். இனிமேல், உன் மனஸிலே, எனக்கு அந்த இடம் இல்லை!' என்று கமலம் வேகமாகச் சொன்னாள்.

அவளுடைய சஞ்சலத்தைக் கண்டதும் நடேசன் கலக்கம் கொண்டான்.

'கமலம், என் மனஸிலே உனக்கு இருந்த இடம் உனக்குத்தான்! அதற்கு வேறு யாரும் வரமுடியாது!' என்றான்.

'பின் அவள்?' என்று கமலம் சட்டென்று முகத்தைத் திருப்பி அவனைப் பார்த்துக்கொண்டு கேட்டாள்.

'அவளுக்கு வேறு இடம் என்று வைத்துக் கொள்ளேன்'.

'அதான், அதான் அண்ணா, நான் சொன்னது; அவளுக்கு ஓர் இடம்

உண்டோல்லியோ?'

இதைக் கேட்டதும் நடேசனுக்குக்கொஞ்சம் மனஸ்தாபம் ஏற்பட்டது.

'இதென்ன கேள்வியென்று கேட்கிறாய் கமலம்?'

'கேட்டேன்! கோபித்துக் கொள்ளாதே, அண்ணா!-இனிமேல் நீ என் சுவாதீனம் இல்லை - நீ அவளுக்குச் சுவாதீனம் ஆகிவிட்டாய்!'

அவள் கண்களில் ஜலம் பெருகி ஓடிற்று; அதைத் துடைத்துக் கொண்டு பேசலானாள்.

'நான் சொல்லுகிறது உனக்குத் தெரிகிறதா? அவளுக்கு உரிமை இல்லை என்று நான் சொல்ல வரவில்லை. நீ அவளைத் தொட்டுத் தாலி கட்டியிருக்கிறாய்-அவள் உன் அகமுடையாள், நிஜந்தான்! ஆனால் இதுவும் நிஜந்தான்: நான்-நான், இனிமேல், நிர்ப்பயமாக உன் பக்கத்தில் வந்து உட்கார முடியாது; – மொத்தத்தில் முன்போல் இருக்க முடியாது!'

'ஏன் முடியாது?'

'அவள் பார்ப்பாள்!'

'அதனால் என்ன? அவளும் கூட இருக்கிறாள்!'

'அண்ணா, உனக்குத் தெரியாது. நாங்கள் இருவரும் உன்னுடன் கூட இருக்க முடியாது! நான் தனியாகவும் உன்னுடன் இருக்க முடியாது! அவள்தான்-'

கமலம் மறுபடியும் பலபலவென்று கண்ணீர் உதிர்த்து மௌனமானாள்.

'என்ன, அசடாட்டமாப் பேசிக்கொண்டு! தூக்கம் வரவில்லையா?' என்று நடேசன் அர்த்தமில்லாமல் ஏதோ சொன்னான்.

கமலம் மூக்கைச் சிந்திக்கொண்டு, 'தூக்கத்திற்கு என்ன? எது வந்தாலும் தூங்காமலா போகிறோம்?' என்றாள்.

அவள் இந்த மாதிரி திடீரென்று மிகவும் பெரியவள் போலப் பேசினது நடேசனுக்குப் பிடிக்கவில்லை.

'இப்பொழுது என்ன வந்துவிட்டது?' என்று அவளைப் பார்த்துக் கொண்டே கேட்டான்.

'உனக்கும் எனக்கும் நடுவிலே ஒரு திரை வந்துவிட்டது!'

'ராஜத்துடன் நீ இன்னும் சரியாகக்கூடப் பழகவில்லை, பேச வில்லை. அதற்குள் நீ அவளைத் திரை, தட்டி என்றெல்லாம் சொல்வது சரியா, கமலம்?'

'பேசவேண்டுமா என்ன? என் மனஸில் பட்டு விட்டது.'

'அது தப்பு. காரணமின்றி நீ-' என்று நடேசன் கொஞ்சம் கடுமையான குரலில் ஆரம்பித்தான் .

கமலம் குறுக்கிட்டு 'அதோ! இப்பொழுதே ஆரம்பித்துவிட்டாயே! வேறு காரணம் வேண்டுமோ இப்பொழுது?' என்று படபடத்துப் பேசினாள்.

'சரி, நாழிகை ஆகிறது, போய்ப் படுத்துகொள்!' என்றான் நடேசன் கோபத்துடன்.

கமலத்தின் கண்ணீர் நின்றுவிட்டது. அவளுக்கும் கோபம் வந்து விட்டது.

'நாழிகைதான் ஆகிறது; தெரியவில்லையா? நாழிகைக் கணக்கெல்லாம் உனக்கு இனிமேல் நன்றாகத் தெரியும். தெரியாவிட்டலும் அவள்-' என்று சொல்லிக்கொண்டு கமலம் சடக்கென்று எழுந்து நின்றாள்.

★★★

'என்னடா மக்குப் பிடித்தவன்போல் உட்கார்ந்திருக்கிறாய்? வீட்டில் ஏதாவது புயலோ?' என்று கோபாலன் நடேசனைக் கேட்டான். தாங்கித் தாங்கிப் பார்த்தான்; அவனால் முடியவில்லை எரிச்சலை அடக்க.

'புதிதாக ஒன்றும் இல்லை. எல்லாம் பழைய சமாசாரந்தான்!'

'பின் என்ன அதைப்பற்றி இவ்வளவு தத்துவ ஆராய்ச்சி?'

'அது எதனால் என்பதுதான் விளங்காத புதிராக இருக்கிறது'.

'விளங்காதது ஒன்றுமே இல்லையே! என்ன விளங்கவில்லை? எது புதிர்?'

'ராஜம் என் மனைவி என்பதைக் கமலம் ஏன் மறக்கிறாள்?'

'கமலம் உன் கூடப்பிறந்தவள் என்பதை ராஜம் ஏன் மறக்கிறாள்?'

'ஆதுதான் தெரியவில்லை'.

'ஏன், தெரியவில்லையா? இதோ, கீழே கிடக்கிறதே நெல்லிக்கனி, அதை எடுத்து உன் உள்ளங்கையிலே வைத்துக்கொள்; தெரியும்'.

'நான் இருவரையும் சமமாகவேதான் பாவிக்கிறேன்'.

'அதனால் தான்!'

'என்ன அதனால்தான்?'

'இரண்டு பக்கமும் அசூயை!'

'எதற்காக அசூயை?'

'தன் கை உயரவில்லையே என்றுதான்!'

உயரத்தில் ஒரு கொக்குக்கூட்டம் வேகமாய்ப் பறந்து போய்க் கொண்டிருந்தது. விட்டுவிட்டு, 'க்வாக், க்வாக்' என்ற சத்தம் கேட்டது. 'ஆமாம், ஆமாம்' என்பது போல இருந்தது அது நடேசனுக்கு.

'இப்பொழுது சிக்கல் தீர்ந்ததா?' என்று கோபாலன் மதகை விட்டு எழுந்து கொண்டே கேட்டான்.

'சிக்கலா? தீருவதாகவே இல்லை!' என்று சொல்லிக்கொண்டு நடேசனும் எழுந்திருந்தான்.

•